லும், சேர - ஒன்றாய், திறை கொள் - கப்பங்கொள்ளத்தக்க, மொழியின் - சொற்களாலே, சுவையே - சுவைகளே, முதிர்ந்து - மிக்கிருக்கும்படி, நிடதபதி - நிடததேசத்துக்கு அரசனாகிய, நளன் - நளச்சக்கரவர்த்தியின், பார் ஆர் - பூமியில் எங்கும் நிறைந்த, சீர் - சிறப்பினையுடைய சரித்திரத்தை, வெண்பாவால் - (நேரிசை) வெண்பாவினால், பேசினான் - பாடினார், எ-று.

(வி-ரை.) பாண்டியனும் சோழனும் கேட்டமாத்திரத்தில் மனமிணங்கிக் கப்பங்கட்டும்படி வளமமைந்து நிற்கின்றன இந்நூலின் மொழிகள் என்பார் 'தாரார், செழியனையும் சென்னியையுஞ் சேரத் திறைகொண், மொழி' என்றும், இந்நூலிற் பொருட்சுவையில்லாச் செய்யுட்களே இல்லை என்பார் 'சுவையே முதிர்ந்து' என்றுங் கூறினார். தாரார்செழியன், தாரார்சென்னி என்றியைக்க. தமிழ் அரசர் மூவராக, இதில் இருவரைமாத்திரம் கூறியது என்னெனின், இவர் அவ்விரு அரசரிடமாத்திரம் சென்றிருந்தனராகலின் என்க. இந்நூலில் ஒருவரோடொருவர் பேசும்படி இயற்றப்படும் நாடகச்சுவை யமைந்திருக்கின்றது என்பார் 'பேசினான்' என்றார். செழியனையும் சென்னியையும் உருபுமயக்கம். இருக்கும்படி என்பது இசையெச்சம்.

குறிப்பு: இம்மூன்று செய்யுட்களும் இவற்றிற்கு உரையும் பிள்ளையவர்களின் உரைப்புத்தகத்திற் காணப்பட்டில; ஆயினும், இச்செய்யுள்கள் வேறு பிரதிகளிற் காணப்படுகின்றமையின், இவை இறுதியிற் சேர்க்கப்பெற்று உரை யெழுதப்பட்டன.

நளவெண்பா மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.



ஸ்ரீ

# நளவெண்பாவின்

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

நளவெண்பாவின் செய்யுள் முதற்குறிப்பகராதி
முற்றுப்பெற்றது.